உ

# சைவமடமும் ஸ்மார்த்தமடமும்.

சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவமடத்திற்கும், கேவலாத்து விச ஏகான்மவாத ஸ்மார்த்த மடத்திற்கும் எவ்வகையிலுஞ் சம்பந்தமில்லையென்பது உலகப்பிரசித்தம். எங்ஙனமெனின்,

சைவர் - வேதாகமங்களிரண்டனையும் ஈஸ்வரன் வாக்கென்பர்.

ஸ்மார்த்தர் வேதம் சுயம்பு ஆகமம் கற்பிதமென்பர்.

சைவர் - தெய்வமொன்றுண்டு அத்தெய்வத்திற்குச் சராசரப் பிரபஞ்சம் எந்நாளும் அடிமைப்பொருளும் உடைமைப்பொருளுமென்பர்.

ஸ்மார்த்தர் - எல்லாம் பொய்தானே ஏகம்பிரமந்தானே அதுவும் நான் தானே யென்பர்.

சைவர் - பதிபசுபாச மூன்றும் அனாதிநித்தியமென்பர்.

ஸ்மார்த்தார் - பதியொன்றே சத்தியம் பசுபாசமித்தை யென்பர்.

சைவர் தத்துவமுப்பதாறென்பர்,

ஸ்மார்த்தர் தத்துவமறு பத்து நான்கென்பர்,

சைவிர் - விபூதி, உருத்திராட்சம், பஞ்சாட்சரம் சிவபூஜை எக்காலத்துஞ் சத்தியசாதனங்களென்பர்.

ஸ்மார்த்தர் - இவையனைத்தும் விவகாரத்திலன்றிப் பாரமார்த்தத்தில் பொய்யென்பர்.

சைவர் - கடவுள் உலகில் உள்ளும் புறம்பும் அத்துவிதமாகக்கலந்து சர்வவியாபகராயிருப்பனென்பர்.

ஸ்மார்த்தர் - பிரமம் உபாதிவசத்தால் மண்ணும் பிரமம், மனிதனும் பிரமம், ஆடும் பிரமம், மாடும்பிரமம், பல்லக்கும் பிரமம் அதிலேறுபவனும்பிரமம், அதைச் சுமப்பவனும் பிரமம், துன்பஞ்செய்பவனும் பிரமம், அதையேற்றுக்கொள் பவனும் பிரமம் என்பர்.

சைவர் - ஈஸ்வரனால திட்டிக்கப் பட்ட மும்மூர்த் திகளும் தெய்வமென்பர்.

ஸ்மார்த்தர் - பிரமம் மாயையிற் பிரதிபலிக்கமும் மூர்த்திகள் பொய்த்தோற்றமென்பர்.

சைவர் - அறுபான் மும்மை நாயன் மார்களைப் பரமஞானிகளென்பர்.

ஸ்மார்த்தர் - அவர்கள் சாமான்னிய பக்தி காண்டிகளென்பர்.

சைவர் - தேவார திருவாசகங்களைத் தமிழ்வேதமென்பர்.

ஸ்மார்த்தர் - அல்லவென்பர்,

சைவர் - ஆன்மாக்கள் தங்கள் அஞ்ஞான நீங்க முத்தியடைவரென்பர்.

ஸ்மார்த்தர் - முத்தியென்பதொன் றில்லை ஆன்மா வாகிய தன்னைவிசாரணையில் தன்னைப் பிரமமாகக்காணுவதே அந்நிலை யென்பர்.

இவையிங்ஙனமாக, திருப்பணந்தாள் ஆதினம் ஸ்ரீ சொக்கலிங்கத் தம்பிரான் சுவாமிகள் கும்பகோணம் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளிடம் சென்று விபூதிப்பிரசாதம் பெற்று அவராசீர்வாத மேற்றுவந்ததாக ஆங்கிலேய இந்து பத்திரிகையினால்

தெரியவருகிறது. இஃதுண்மையேல் வைதிகசைவ சமயவரம்பு தடுமாறி விட்டதாகக்கொள்ள வேண்டிவருமன்றோ? கொள்ள வேண்டியதில்லையெனில், கொள்ளவேண்டுவது தானென, திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்தில் அருள்வண்மையும் கொடை வண்மையும் வாய்ந்து, வைதிக சைவசமயாபி விருத்திக்கு இலகாக எழுந்தருளியிருக்கும் மகாசந்நிதானத்தில் ஷை தம்பிரான் சுவாமிகள் உண்மை தெரிந்து கொள்ளும்படி விரும்புகின்றனம். அங்ஙனம் செய்யேம் நம்பிரியப்படி செய்வேமென்பாரேல், நாமினிமௌனம்.

மெய்கண்ட சம்பிரதாயமென்மேலு மோங்குக.

மணவழகு.

சித்தாந்தம் - 1916 ஸ்ரீ - ஆகஸ்டு மீ